**14 T I,II**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2019 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2019 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2019

කතෝලික ධර්මය I, II
கத்தோலிக்க திருமறை I, II
Catholicism I, II

02. 12. 2019 / 0830 - 1140

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

**வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.**

## கத்தோலிக்க திருமறை I

**கவனிக்க :**
(i) **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(ii) 1 தொடக்கம் 40 வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
(iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

**1.** பவுலின் அறிவுரைப்படி அவரின் சீடரால் எழுதப்பட்ட திருமுகங்களில் ஒன்று
(1) 1 தீமோத்தேயு (2) எபேசியர்
(3) உரோமையர் (4) தீத்து

**2.** திருவெளிப்பாட்டு இலக்கியத்தில் மரணத்தைக் குறிக்கும் நிறக்குறியீடு
(1) வெளிறிய நிறமாகும். (2) சிவப்பு நிறமாகும்.
(3) கறுப்பு நிறமாகும். (4) வெள்ளை நிறமாகும்.

**3.** திருவெளிப்பாட்டு நூலின் எழுத்தாளராக முன்வைக்கப்படுபவர்,
(1) திருத்தூதர் பேதுரு ஆவார். (2) திருத்தூதர் யோவான் ஆவார்.
(3) திருத்தூதர் யாக்கோபு ஆவார். (4) திருத்தூதர் பர்னபா ஆவார்.

**4.** ஞான இலக்கியத்தில் அடங்கும் ஒரு நூல்,
(1) இனிமை மிகு பாடலாகும். (2) பாரூக்காகும்.
(3) புலம்பலாகும். (4) யூதித்தாகும்.

**5.** எபிரேய ஞானத்தின் பிரிவுகளில், வாழ்க்கையின் அர்த்தம் அதன் சிக்கல்கள், தீர்வுகள் பற்றிய கருத்தியலை உள்ளடக்கிய விளக்கத்தினைக் குறிப்பிடுவது,
(1) அரசசபை ஞானம் என்றாகும்.
(2) அன்றாட வாழ்க்கை பற்றிய ஞானம் என்றாகும்.
(3) குடும்பம் அல்லது கோத்திர ஞானம் என்றாகும்.
(4) ஆன்மீக ஞானம் என்றாகும்.

**6.** ஏரோதின் எந்தக் கேள்விகளுக்கும் இயேசு பதில் அளிக்காததால் அவன் இயேசுவை என்ன செய்தான் ?
(1) சீசர் அரசனிடம் அனுப்பினான்.
(2) பரபாசை முன்வைத்தான்.
(3) அரசமாளிகைக்குள் அழைத்துச் சென்று வினவினான்.
(4) மீண்டும் பிலாத்துவிடம் அனுப்பினான்.

[பக். 2 ஐப் பார்க்க

7. இயேசு தமது உயிர்ப்பின் எட்டு நாட்களுக்குப் பின்னர் யாருக்குக் காட்சி கொடுத்தார் ?
(1) புனித பேதுருவிற்கு (2) புனித பவுலுக்கு
(3) புனித தோமாவிற்கு (4) புனித யோவானுக்கு

8. சவுலுக்கு திருமுழுக்குக் கொடுத்தவர் யார் ?
(1) அனனியா (2) பர்னபா
(3) திருமுழுக்கு யோவான் (4) பேதுரு

9. தூய பவுலை சிரச்சேதம் செய்து கொலை செய்யக் கட்டளையிட்டது யார் ?
(1) அவுரேலியன் (2) திராஜன்
(3) நீரோ (4) ஏரோது அந்திபாஸ்

10. போர்த்துக்கேயர் இலங்கைக்கு வருகை தந்தவுடன் கி.பி. 1543 இல் இந்நாட்டுக்கு வரவழைத்துக் கொண்ட மறைபோதகக் குழுவினர் யார் ?
(1) அமலமரி தியாகிகள் சபை மறைப் போதகர்கள்
(2) பெனடிக் சபை மறைப் போதகர்கள்
(3) ஒறத்தோறியன் சபை மறைப் போதகர்கள்
(4) பிரான்சிஸ்கன் சபை மறைப் போதகர்கள்

11. "தனது நண்பனுக்காக உயிரைக் கொடுப்பதை விட .................... யாரிடமும் இல்லை."
இடைவெளிக்குப் பொருத்தமான விடை
(1) சிறந்த அன்பு (2) சிறந்த உள்ளம்
(3) சிறந்த சகோதரத்துவம் (4) சிறந்த சிந்தனை

12. 'மரியாயின் மாசற்ற இருதயச் சேனை' என்ற சபையை ஆரம்பித்தவர்
(1) பெற்றிக் ஓசான்னம் அடிகளார் ஆவார்.
(2) புனித மக்ஸிமிலியன் கோல்பே அடிகளார் ஆவார்.
(3) திருத்தந்தை XXIII ஆம் அருளப்பர் ஆவார்.
(4) திருத்தந்தை II ஆம் அருளப்பர் சின்னப்பர் ஆவார்.

13. 'சுப செத்கெதர'வை தனது வசிப்பிடமாக்கிக் கொண்ட தேசிய மறைப் போதகக் குருவானவர்
(1) புனித யோசே வாஸ் அடிகளார் ஆவார்.
(2) அருட்பணி மோசே அடிகளார் ஆவார்.
(3) அருட்பணி மைக்கல் றொட்றிகோ அடிகளார் ஆவார்.
(4) அருட்பணி யாக்கோமே கொன்சால்வேஸ் அடிகளார் ஆவார்.

14. "பிள்ளைகளே உங்கள் பெற்றோருக்கு முற்றிலும் கீழ்ப்படியுங்கள்; ஆண்டவரைச் சார்ந்தவர்களுக்கு இதுவே தகும்." இவ்வார்த்தைகள் குறிப்பிடப்பட்டிருப்பது,
(1) சபை உரையாளர் நூலில் ஆகும். (2) சீராக்கின் ஞானம் நூலில் ஆகும்.
(3) கொலோசேயர் திருமுகத்தில் ஆகும். (4) எபேசியர் திருமுகத்தில் ஆகும்.

15. மதுபானம் அருந்துதல் மற்றும் புகைப்பிடித்தல் தவறான செயல் எனப் பத்துக்கட்டளைகளில் ................ எடுத்துக்காட்டப்படுகிறது.
(1) ஐந்தாம் கட்டளையில் (2) ஏழாம் கட்டளையில்
(3) எட்டாம் கட்டளையில் (4) பத்தாம் கட்டளையில்

16. "உண்மைக்கெல்லாம் ஊற்றாக இருப்பவர் இறைவனே; அவருடைய வார்த்தை உண்மை உள்ளது; அவருடைய திருச்சட்டம் உண்மையுள்ளது." இவ்வாறு குறிப்பிடப்பட்டிருப்பது,
(1) திருத்தூதர்களின் டிடாக்கே நூலில் ஆகும்.
(2) பெரிய குறிப்பிடத்தில் ஆகும்.
(3) சிறிய குறிப்பிடத்தில் ஆகும்.
(4) கத்தோலிக்க திருச்சபை மறைக்கல்வி நூலில் ஆகும்.

17. கிறிஸ்துவின் திருமுழுக்குத் திருவிழாவின் மறுநாள் தொடக்கம் விபூதிப் புதனுக்கு முதல்நாள் வரையான காலம் உட்படுவது,
(1) பாஸ்கா காலத்திற்காகும். (2) பொதுக் காலத்தின் முதற் பகுதிக்காகும்.
(3) பொதுக் காலத்தின் இரண்டாம் பகுதிக்காகும். (4) தவக்காலத்திற்காகும்.

[பக். 3 ஐப் பார்க்க

**18.** திருப்பலியில் இடம்பெறும் காணிக்கைப் பவனி உட்படுவது,
(1) ஆரம்பச் சடங்கிற்குள் ஆகும்.
(2) மனத்துயர் வழிபாட்டுப் பகுதிக்குள் ஆகும்.
(3) பீடத்தை ஆயத்தம் செய்யும் சடங்கிற்குள் ஆகும்.
(4) நற்கருணைவிருந்து பகுதிக்குள் ஆகும்.

**19.** திருப்பலியின் பிரதான மன்றாட்டு ஆவது,
(1) நற்கருணை மன்றாட்டாகும்.
(2) திருப்புகழ் மாலை மன்றாட்டாகும்.
(3) நம்பிக்கையாளரின் மன்றாட்டாகும்.
(4) காலை மன்றாட்டாகும்.

**20.** உன்னத குருவின் வேண்டுதலைக் குறிப்பிடும் புதிய ஏற்பாட்டின் ஒரேயொரு நற்செய்தியாளர்,
(1) புனித லூக்கா ஆவார்.
(2) புனித மத்தேயு ஆவார்.
(3) புனித மாற்கு ஆவார்.
(4) புனித யோவான் ஆவார்.

**21.** யாவே மரபிற்குரிய இரண்டு கதைகள்,
(1) படைப்பின் முதற் கதை, நோவாவுடன் உடன்படிக்கை என்பனவாகும்.
(2) ஆதாம் - ஏவாள் பாவத்தில் விழுதல், காயின் - ஆபேல் கதை என்பனவாகும்.
(3) காயின் - ஆபேல் கதை, ஈசாக்கைப் பலியிடுதல் என்பனவாகும்.
(4) ஈசாக்கைப் பலியிடுதல், யாக்கோபு பெத்தேலில் கண்ட கனவு என்பனவாகும்.

**22.** எழுத்து வடிவம் பெறாத, இறைவாக்கினரை மட்டும் கொண்ட தெரிவு
(1) எரேமியா, குல்தா
(2) எலியா, எசாயா
(3) நாத்தான், எலியா
(4) நாத்தான், ஓசேயா

**23.** நெருப்புப் பொறியினால் உதடுகள் தூய்மையாக்கப்பட்ட இறைவாக்கினர்,
(1) எரேமியா ஆவார். (2) ஓசேயா ஆவார். (3) நாத்தான் ஆவார். (4) எசாயா ஆவார்.

**24.** புனித மாற்கு நற்செய்தியைக் குறிக்கும் இன்னுமொரு பெயர்,
(1) ஏழைகளின் நற்செய்தியாகும்.
(2) பாடுகளின் நற்செய்தியாகும்.
(3) ஆன்மீக நற்செய்தியாகும்.
(4) பெண்களின் நற்செய்தியாகும்.

**25.** புனித லூக்கா நற்செய்தி ஆரம்பிக்கப்படுவது,
(1) இயேசுவின் பிறப்பின் நிகழ்வுடனாகும்.
(2) இயேசுவின் தலைமுறை அட்டவணையுடனாகும்.
(3) குருவாகிய சக்கரியா பலி ஒப்புக்கொடுக்கும் நிகழ்வுடனாகும்.
(4) திருமுழுக்கு யோவானின் போதனையுடனாகும்.

**26.** புனித யோவான் நற்செய்தியின் நோக்கம் என்ன ?
(1) நம்பிக்கையை ஏற்படுத்துதல்
(2) இயேசுவின் அதிகாரத்தை எடுத்துக்காட்டுதல்
(3) இயேசு குணமளிப்பவர் எனக் கூறுதல்
(4) இயேசு ஓர் ஆசிரியர் எனக் கூறுதல்

**27.** இயேசுவைப் பின்சென்ற செபதேயுவின் புதல்வர்கள் இருவரும்,
(1) பேதுருவும் அந்திரேயாவும் ஆவர்.
(2) யோவானும் அந்திரேயாவும் ஆவர்.
(3) பேதுருவும் யோவானும் ஆவர்.
(4) யோவானும் யாக்கோபுவும் ஆவர்.

**28.** தொடக்க நூலில் முதலாம் அதிகாரம் தொடக்கம் பதினோராம் அதிகாரம் வரையான பகுதி,
(1) தார்மீக வரலாறு எனப்படும்.
(2) உலகலாவிய வரலாறு எனப்படும்.
(3) வரலாற்றுக்கு முற்பட்ட காலம் எனப்படும்.
(4) விஞ்ஞானமய வரலாறு எனப்படும்.

**29.** படைப்பு பற்றிய இரண்டாவது கதை எந்த மரபைச் சேர்ந்த ஆக்கமாகும் ?
(1) குரு மரபை
(2) யாவே மரபை
(3) எலோகிம் மரபை
(4) இணைச்சட்ட மரபை

[பக். 4 ஐப் பார்க்க

**30.** திருமுழுக்கு யோவானின் தலையை ஒரு தட்டில் வைத்து கொண்டுவரும்படி ஏரோதிடம் கேட்டது யார் ?
(1) ஏரோதியாளின் மகள் ஆவார் (2) ஏரோதின் மகள் ஆவார்
(3) ஏரோதின் மகன் ஆவார் (4) தலைமை அமைச்சர் ஆவார்

**31.** தனது தனிப்பட்ட புகழுக்காக மட்டும் செயற்படக்கூடாது என்பதை எடுத்துக்காட்டுவது, இயேசுவின்
(1) முதல் சோதனையாகும். (2) இரண்டாவது சோதனையாகும்.
(3) மூன்றாவது சோதனையாகும். (4) நான்காவது சோதனையாகும்.

**32.** இறை அரசு என்பது,
(1) விடுதலை பெற்ற சுதந்திரமான ஓர் இடமாகும்.
(2) அடிக்கடி திருமணித்தியாலம் ஒப்புக்கொடுப்பதாகும்.
(3) தான் குற்றமற்றவர் என சிந்திக்கும் இடமாகும்.
(4) இறை விருப்பத்திற்கும் ஆட்சிக்கும் இடங்கொடுப்பதாகும்.

**33.** உறுதிப்பூசுதலை வழங்கும் முதல் தகுதிபெற்ற பணியாளன் யார் ?
(1) குருவானவர் (2) ஆயர்
(3) திருத்தொண்டர் (4) அருட் சகோதரர்

**34.** திருப்பாடல் 51:17 இல் குறிப்பிடப்படும், இறைவனுக்குகந்த காணிக்கை யாது ?
(1) மாசுபடாத மிருகம் (2) தூபப் பலி
(3) நொறுங்கிய உள்ளம் (4) முதல் அறுவடை

**35.** 'நோயாளியின் தூய பூசுதல்' என்னும் அப்போஸ்தலிக்கப் படிப்பினையை எழுதியவர்
(1) திருத்தந்தை VI வது சின்னப்பர் ஆவார்.
(2) திருத்தந்தை II வது அருளப்பர் சின்னப்பர் ஆவார்.
(3) திருத்தந்தை X வது பத்திநாதர் ஆவார்.
(4) திருத்தந்தை XXIII வது அருளப்பர் ஆவார்.

**36.** பின்வரும் A, B, C, D ஆகிய கூற்றுகளைக் கவனிக்குக.
A - பெற்றோரின் வயோதிப நிலையில் அவர்களைப் பராமரித்தல்
B - அந்நியோன்னிய அன்பால் முழுமையடைதல்
C - சகோதர சகோதரிகளுடன் ஒற்றுமையாக இருத்தல்
D - குழந்தைப் பேறும் அவர்களை வளர்த்தலும்
மேலே கூறப்பட்டவற்றுள் கிறிஸ்தவ திருமணத்தின் குறிக்கோள்களாவன
(1) A, B (2) A, D (3) B, C (4) B, D

**37.** ஏழைகளுக்கு உதவி செய்து, அன்பு செய்ய நமக்கு மிகச் சிறப்பாக வழிகாட்டும் புனித வின்சன்ட் டீ போல் சபையை ஆரம்பித்தவர்,
(1) ஆயர் புனித காடையின் ஆவார். (2) புனித பிறடிக் ஓசான்னம் ஆவார்.
(3) புனித பேதுரு ஆவார். (4) புனித ஜெரோம் ஆவார்.

**38.** படைப்பு பற்றிய இரண்டாவது கதையின்படி பயிரிடுதல் என்பதற்குப் பயன்படுத்தப்படும் எபிரேயச் சொல்
(1) அபாத் என்பதாகும். (2) றாபா என்பதாகும்.
(3) ஷாமார் என்பதாகும். (4) கப்பத்தா என்பதாகும்.

**39.** உள்ளார்ந்த அமைதியைக் குறிக்கும் எபிரேயச் சொல்
(1) இஸ்ரயேல் (2) ஷாலொம்
(3) அகாப்பே (4) பிரெஸ்பிட்டரோய்

**40.** கர்த்தர் கற்பித்த செபத்தை எழுதியுள்ள இரு நற்செய்தியாளர்களும் யாவர் ?
(1) புனித யோவானும் புனித மத்தேயுவும் ஆவர். (2) புனித மத்தேயுவும் புனித மாற்குவும் ஆவர்.
(3) புனித மாற்குவும் புனித யோவானும் ஆவர். (4) புனித லூக்காவும் புனித மத்தேயுவும் ஆவர்.

* *

[பக். 5 ஐப் பார்க்க

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

**14 | T | I, II**



අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2019 දෙසැම්බර්
**கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2019 டிசெம்பர்**
**General Certificate of Education (Ord. Level) Examination, December 2019**

| | |
|---|---|
| කතෝලික ධර්මය | **I, II** |
| **கத்தோலிக்க திருமறை** | **I, II** |
| Catholicism | **I, II** |

## கத்தோலிக்க திருமறை II

* **முதலாம்** வினாவுக்கும் மேலும் **நான்கு** வினாக்களுக்குமாக மொத்தம் **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.
* முதலாம் வினாவின் விடைக்கு **20** புள்ளிகளும் ஏனைய ஒவ்வொரு வினாவின் விடைக்கும் **10** புள்ளிகள் வீதமும் வழங்கப்படும்.

---

**1.** (i) திருத்தூதர் பணி நூலை எழுதிய புனித லூக்கா பற்றி நீர் அறிந்த **இரு** விடயங்கள் எழுதுக.

(ii) வெளிப்பாட்டு இலக்கியத்தின் பண்புகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(iii) ஆரம்பத் திருச்சபையின் பண்புகள் **இரண்டு** எழுதுக.

(iv) அருட்பணி யாக்கோமே கொன்சால்வேஸ் அடிகளார் இந்நாட்டிற்கு ஆற்றிய சேவைகள் **இரண்டு** எழுதுக.

(v) யூத பாஸ்கா உணவில் முக்கியத்துவம் பெற்றவை நான்கில் **இரண்டினைப்** பெயரிடுக.

(vi) புனித லூக்கா நற்செய்தியை அறிமுகம் செய்யும் வேறு **இரு** பெயர்களை எழுதுக.

(vii) திருமுழுக்கு யோவானின் பிறப்பின் பின் எட்டாம் நாள் நிறைவேற்றிய சடங்குகள் **இரண்டினைக்** குறிப்பிடுக.

(viii) புனித லூக்கா 4 : 18 - 19 இன்படி இயேசுவின் தூதுப் பணியின் மூலம் நல்வாழ்வைப் பெற்றுக்கொடுத்த **இரு** குழுவினரைக் குறிப்பிடுக.

(ix) சுய நம்பிக்கையின் மீது இயேசுவிடம் குணமடைந்த நோயாளர் **இருவரைப்** பெயரிடுக.

(x) விதைப்பவன் உவமையில் குறிப்பிடப்படும் விதைகள் விழுந்த **இரு** வகை நிலங்களைக் குறிப்பிடுக.

**2.** (i) இஸ்ரயேலின் பலிகளின் **இரு** பிரிவுகளையும் எழுதுக.

(ii) மெல்கிசதெக் என்னும் குரு வாழ்ந்த நகரத்தைப் பெயரிட்டு, அவர் முதன்முறையாகக் கடவுளுக்கு ஒப்புக்கொடுத்தவை யாவை என எழுதுக.

(iii) இயேசு தமது சீடர்களின் பாதங்களைக் கழுவிய செயலின் மூலம் உமது வாழ்க்கைக்குக் கற்றுக்கொள்ளக் கூடிய படிப்பினைகள் **ஐந்தினை** எழுதுக.

**3.** (i) திருப்பலிக்குத் தலைமைதாங்கும் குருவானவரின் மூன்று செபங்களில் **இரண்டினைக்** குறிப்பிடுக.

(ii) தூய நற்கருணையின் சிறப்பியல்புகளில் **மூன்றினை** எழுதுக.

(iii) திருப்பலியில் சிறந்த முறையில் பங்கேற்க கிறிஸ்தவர்களாகிய எம்மால் நிறைவேற்றப்பட வேண்டிய செயல்கள் **ஐந்தினை** விளக்குக.

**4.** (i) தனியார் சொத்துகளைக் கையாள வேண்டிய முறை பற்றி நமக்குக் கட்டளையிடும் இறை கட்டளைகள் **இரண்டையும்** எழுதுக.

(ii) கெத்சமனித் தோட்டத்தில் செபத்தின் மூலம் சக்தியைப் பெற்றுக்கொள்ளாத திருதூதர்கள் இயேசு பிடிப்பட்ட பின்னர் சோதனைக்குள்ளாகிச் செய்த செயல்கள் **மூன்றினைக்** குறிப்பிடுக.

(iii) ஒழுக்க விழுமிய சமுதாயம் ஒன்றைக் கட்டியெழுப்புவதில் ஆட்சியாளரின் கடமைகளும் பொறுப்புகளும் **ஐந்து** எழுதுக.

[பக். 6 ஐப் பார்க்க

5. (i) பொது நிலையினர் மறைத்தூதுப் பணியாற்றும் பக்திச் சபைகள் **இரண்டின்** பெயர்களைத் தருக.

(ii) பொதுக் குருத்துவத்தைப் பெற்ற அனைத்து கிறிஸ்தவர்களுக்குமுரிய **மூவிதப்** பணிகளையும் பெயரிடுக.

(iii) இன்றைய சமுதாயத்தில் நிலவும் பிரச்சினைகளின் முன்னே இயற்கையைப் பாதுகாத்தல் தொடர்பாக, ஒரு சபையாகப் பொது நிலையினர், துறவிகள் ஆகியோரது பொறுப்புகளையும் கடமைகளையும் **ஐந்து** விடயங்களினூடாக எழுதிக் காட்டுக.

6. (i) மரியன்னையை நாம் கௌரவிப்பதற்கான காரணங்கள் **இரண்டு** தருக.

(ii) மரியன்னை திருச்சபையின் அன்னை என்பதை எடுத்துக்காட்ட உதாரணங்கள் **மூன்று** எழுதுக.

(iii) மரியன்னையின் வாழ்க்கையின் மூலமும் காட்சிகளின் மூலமும் நாம் பெற்றுக்கொள்ளக் கூடிய செய்திகள் **ஐந்தினைக்** குறிப்பிடுக.

7. பின்வரும் தலைப்புகளில் **இரண்டைத்** தெரிவுசெய்து சிறுகுறிப்பு எழுதுக.

(i) புனித யோசே வாஸ் அடிகளார்

(ii) மேன்மைதங்கிய திருத்தந்தை பிரான்சிஸ்

(iii) இளம் கத்தோலிக்க மாணவர் இயக்கம் (YCS)

(iv) மறைசாட்சி ஆவதின் மேன்மை

* * *